உ

ஸ்ரீ அறம்வளர்த்தநாயகியார் துணை.

# ஸ்ரீ நடராஜா கீர்த்தனை



குலசேகரபட்டணம் கோயில்

தேவாரப்பணிவிடை

இராமநாத ஓதுவாமூர்த்தியவர்கள் குமாரர்

சிவசிதம்பரஓதுவாமூர்த்தி அவர்களால்

பாடப்பட்டது.

திருநெல்வேலி பஜனைமடம்

ஸ்ரீமான் சிதம்பரம்பிள்ளையவர்களால்

பரிசோதிக்கப்பட்டது.

மேற்படி ஓதுவாமூர்த்தி சகோதரர்

ரா. ம. குமாரசுவாமிபிள்ளையவர்களால்

திருநெல்வேலி

...ம் பிரஸில் பதிப்பிக்கப்பெற்றது.

1916

சரணம்.

சமைய குரவர் நால்வருக்குப் போதித்து
தன்னடிக்கீழ் குடிகொண்டருளும்பவனே
யிமையா நாடருமிசைவொடுந் துதிக்க
யின்பமோடு பதந்தூக்கி நடனஞ்செய்யும் [கனக]

கருவிகரணங்களில் நின்றசைத்தொளிருங்
கறைமிடற்றண்ணல் பொற்பாதங்கள் பரவி
அரிவிபாயு மெனக்கண்பனி சோறும்
அன்புடையார் கணத்தோடு நின்றுருகி [கனக]

பந்த பாசங்களின்பற்றதை நீக்கும்
பரமசாதுக்களும் பண்புடன் பணிய
சந்ததமுஞ் சிவகாமியை நோக்கித்தானே
யேகமென்றே நடமாடிய [கனக]

---

## ஸ்ரீ அம்பாள் கீர்த்தனம்.

இராகம் கமாசு — தாளம் ரூபகம்.

பல்லவி.

காணக் காணக்கனியுதே-வுன் கமல பாதங்களைக் கண் [காண]

அநுபல்லவி.

சேனையர் வானவர் முனிவருஞ்
செய செயவெனத் துதிக்குமம்மணி [காண]

சரணம்.

உனதாமடியர் குழாங்களொன்று படவகமுருகி
உடல் பொருளாவி மூன்று முன் கைவசமொப்புவித்து
தனதாஞ்சொரு பஞானத்தாரணை செய்து நாளுஞ்
சன்மார்க்கத் தன்பர்கட்கு தயவுசெய்தருள்தற்பரியே [கா]

செந்தாமரைமலர் போலுன் திருவடி தெரிசனசுகத்தை
சிந்திக்காதவர்கள் தன் சென்மஞ்சாப்ல்யமாமோ
பந்தம தாஞ்சமுசாரப்பற்று நீங்கி வுன்னடியன்பரவிப்
பணிந்தேத்தும் வகை பாலித்தருள் பார்பதியே [காண]

நிலைபெறவே வுள் நினைந்து நீக்கரியதேகாதிகளை
நேதி நேதியென செய்து நில்லென்று னன்பர்கட்குத்
தலையாமறை முடிவிளங்குந் தற்பதார்த்த சொருபத்தைத்
தக்கொம சிவோர் மொழியாற்றயை போடருள்தர்ம
வர்த்தனி [காண]

இராகம் சாரங்கம் தாளம் ஆதி

பல்லவி.

வாய்திறந்தொரு-வார்த்தை சொல்லு வாயுன் [வாய்]

அநுபல்லவி.

மாய்தலின்றி மாவடியில் வீற்றிருக்கும்
வல்லி தர்ம சம்வர்த்தனி கனியிதழ் [வாய்]

சரணம்

மங்கை நாரணி நங்கை பார்பதி மாசுடை
அஞ்ஞானமாம் வடிவெனை
செங்கையால்ப் பரிசித்தலாதி செய்து
திவ்வியமான வுன்—புன்முறுவலோடு [வாய்]
திங்கள் வார்சடைத்-தெய்வ நாயகன்
தேவியே யுன்-பாதஞ் சேவை செய்து நின்றேன்
அங்கை கொண்டு நல்லந்ர லென்றெனக்
காதரவினைடைமுர்தமாகுந்திரு [வாய்]
நான் சுபாவமாம் நாம ரூபங்களை
நம்பி மோசமாகி நான் மயங்கினேன்
மான்மழுக்கரத்தர் வாம பாகவல்லி
மாணிக்கவதரமல்கு மசையோடு [வாய்]

இராகம் சங்கராபரணம் தாளம் ரூபகம்

பல்லவி.

அம்மாவருள் செய்வா யறம்வளர்த்தம்மா வருள்செய்வாய்

அநுபல்லவி.

பெம்மான் கச்சியப்பர் நாயகி-பேதையேனைக் கடைக்கண்பார்[அம்]

சரணம்

ஆதிபராசக்தியே யுன்னை யன்பினால் துதிக்குமடியர்
பாதமலரை யர்ச்சித்துருகும் பக்திபுரியப்பாலஸ்கந்தன் [அம்]
உத்தமமாகின்ற வுன்புகழுறுதிபாக வுட்கொள் செவியும்
நத்திவானவரடையு நின்பத நாடுங்கண்களுமிப்போதே [அம்]
செல்வம் பொலியுந்தென் குலசையில்ச் சேர்ந்த மாவின்
கிழடியிலல்லல் நீங்கும்டியவர்கட்கு வருளவன்பினால்வதியும்
[அம்மா]

இராகம் பியாகடை தாளம் சாப்பு

பல்லவி.

அம்பா தர்மவர்த்தனி தாயே-அம்பா தர்ம வர்த்தனி தாயே.

அநுபல்லவி.

சம்புதாணுபால்-தற்பரி சங்கரி [அம்பா]

சரணம்.

உம்பர் வாழ்புகழுங் கம்பமாநகியி
லன்பரை ரட்சிக்க வின்ப பூசனை செய் [அம்பா]
நாதர் நீலகண்ட நாயகியே யுந்தன்
பாதபொற்கமலம் பற்றினேன் கௌரி [அம்பா]
மாவின் கீழடியில் வந்து வீற்றிருந்து
தாவிலன்பர்கட்குத் தயவுசெய்தருளும் [அம்பா]

இராகம் தேசிகதோடி தாளம் ஆதி

பல்லவி.

தாயே தர்ம வர்த்தனி-தாயே தர்மவர்த்தனி

அநுபல்லவி.

நீயே தஞ்சமே யன்றி-நித்தியர் பங்கில் வாழும் [தாயே]

சரணம்.

கங்கை முடித்தவேணிக் கடவுள் பாகத்தில் வாழுன்
பங்கயப்பதமன்றிப்-பற்றிடம் நாடேன் [தாயே]

கஞ்சவிலோசனி-கருணை மனோன்மணி
யஞ்சலென்றருள்வாயே-அறம்வளர்த்த தேவி [தாயே]

பார்பதி தேவி—பக்த சனரட்சகி
சீரடியாரைக் காக்கும் திவ்யபரி பூரணி [தாயே]

இராகம் ஆனந்தவல்லி தாளம் சாப்பு

பல்லவி.

ஆனந்தவல்லி-யருள்பாலிப்பா யறம்வளர்த்தா-எம்மை பூரணி

அநுபல்லவி.

மோனந்தனில்-விளங்குஞ் சொரூபி-மும்மலரகிதர் முற்றுணர்நிரூபி [ஆனந்த]

சரணம்.

மங்கையர்க்கரசி-மணிமகுடதாரி
மனமில்ஞான யோகர்-மருவும் நாரணி
அங்கயற்கணம்மை-யற்புத பிராமி
யன்பிலாதடியேற்-கருள் செய்காரணி [ஆனந்த]

நித்திய கல்யாணி-நிர்மலர்கள் காக்ஷி
நித்த சுத்த புத்த-முக்தி-மாக்ஷிமையே
சத்தியஞ்ஞான ரூபி-சர்வலோக சாக்ஷி
தயவு கூர்ந்தெனையுந்-தாங்கி ரக்ஷிப்பாயே [ஆனந்த]

எண்ணிறந்திரவி-யிங்குதித்தல் போல
யெழில் கொள் சோதி மன்னு மிணையில் சுந்தரி
பண்ணிறைந்த மூவர் பனுவல் பாடுந் தொண்டர்
பணியுந் தென்குலசைப் பதிவளரந்தரி [ஆனந்த]

இராகம் ஆரபி தாளம் ரூபகம்

பல்லவி.

அறம்வளர்த்தாளே யடியேற்கருளம்பிகையே [அறம்]

அநுபல்லவி.

திறமுடைய அடியார் கணந்தினமும்பூசித்துருகித்துதிக்கும் [அறம்]

சரணம்.

அகிலாண்டநாயகி யளவில் நாமத்ததிரூபிணி
நிகிலாதிப் பாசம்விட்டுனை நீக்கமின்றித்தியானஞ்செய்ய [அறம்]
மறையாகம மாதிகளின்னம் வருந்திப்புகல்தற்கரியபொருளே
சிறையாகுமிம்மோகம்விட்டுனைச் சேர்தல்காலமிதுவென்றறியேன்
ஆதாரம் யாதொன்றிலேனுன்னடிகளன்றி யன்பர் வணங்கும்
பாதார விந்தமலரைப் பாலித்தடியேன் பணிகைக்கொண்டு [அறம்]

இராகம் சுருட்டி. தாளம் ரூபகம்

பல்லவி.

கருணாகரியே தமியேனைக்-காத்தருள் செய்வாயே [கருணா]

அநுபல்லவி.

வருணாதி நான்கினடியர் வணங்கி யுருகித்துதிக்கும் [கருணா]

சரணம்.

அண்டர்கள் தமதிருகை குவித்து வற்புதமே யழகே கச்சி
கொண்ட பாண்டி யீஸ்வரனமருங் கோடமர் வல்லியே
பண்டடியர்க்கருள் புரியும் பரமேஸ்வரி யெனத்துதிக்குந்
தொண்டர் கணத்தோடிருத்தி யென் சிறந்துணைமலர்ப்பதஞ்
சூட்டிடுவாய் [கருணா]

மாயாபுரிக்கோட்டை யதனுள் வல்லிருள்தனில் மூழ்கிக்கெடுங்
காயாதிந்திரியம் யானெனக்கருதி யுள்ளமருண்டேன்
தாயாகி வந்தஞ்சலென்று நற்றயவுசெய்து வருள்புரிவாய்
நாயாகினுங் கடையவன்னி நமன்றனக்காளாய் விடாமல் [கருணா]
கல்லேனுமுன் தொண்டர் வாயலிற் கால்மிதிக் கவுரியேனதை
யல்லேன் பிறந்தென்ன பலனையடையும் வழியறியேன்
சொல்லேல சிவநாமமடியர் சூழ் குலசைப்பதியினில் வாழ்
நல்லேல யறம்வளர்த்தாளுனை நாடிப்பதப்பாட நல்கி [கருணா]

இராகம் ஸ்ரீ தாளம் ரூபகம்

பல்லவி.

பரதேவி உன்பாத மலரைப்-பணிந்தேனருள்வாய் பார்பதி [பர]

அநுபல்லவி.

சிரமீரைந்தறக்கன்றேள்வலி-தீர்த்தோனாகத்தைச்சேரப்புல்கிய

சரணம். [பரதேவி]

நாராயணி-யன்பாவார்க்காதரி
நாகாபரணர்-நாயகி
தீராத ஐம்புல-வேடர்கை சிக்கா-புக்கா நிற்கா
யிக்காலமே யான்வெல்க [பரதேவி]

ஆதாரமுன்னருள் தா தா வென்றன்பர்கள்-வாதாடி
யின்னம் வாழ்த்துகின்றார்
யேதானுமோர்நன்மைதனிலுமில்லேன்கல்லேன்-பொல்லேன்
யெனைபாதரியிப்போதே [பரதேவி]

சீர்மருவுந்தென் குலசைப்பதிச்செல்வி
தர்மசம்வர்த்தனியே
யோர்மருவுனன்பர் போலெனை-யிறவா-பிறவா-துறவா
யின்புரல் செய்வதுன்பாரம் [பரதேவி]

இராகம் இந்துஸ்தானி காப்பி தாளம் ரூபகம்

பல்லவி.

நித்திய கல்யாணியென்னை நீ வந்தாள் வதெந்தநாள் [நித்திய]

அநுபல்லவி.

பக்திபுரியுமடியர் பரவசமாயுருகித்துதிக்கும் [நித்திய]

சரணம்.

சங்கரி மனோகரி சாமள ரூபிணி உன் கை கொண்டேன்
சென்னி வைத்துறுதியாகவோர் சொலுரைத்து [நித்திய]

பால சவுந்தரி பரமதயானிதே காலதூதர் வந்தெனைக்
கலக்குவதர்க் கொருப்படுமுன் [நித்திய]

தென்குலசைப்பதிவாழ் சேர் தர்மவர்த்தனி
நன்குடையவன்பரொடுகொடிக்கடைக்கண்பார்த்தருளி [நித்]

இராகம் கமாஸ். தாளம் சாப்பு

பல்லவி

தர்மசம் வர்த்தனியே-தயவு செய்வாய் [தர்ம]

அநுபல்லவி

கர்மசம் வினையேன்-கலக்கமுறாமல் [தர்ம]

சரணம்

அகண்ட ஸ்வரூபி-அகிலாண்ட தேவி
நிகிலத்தின்மயங்காது-நீ காத்தருள்வாய் [தர்ம]
காருண்யர் பாகி-கருணைப்பிரவாகி
சீரைந்தெழுத்துடன்-சிந்திக்கத்தேகி [தர்ம]
நாதர்கச்சிகொண்ட-நாயகியே வுந்தன்
பாதமலரே யன்றிப்-பற்றிடங்காணேன் [தர்ம]
நித்திய கல்யாணி-நிஜானந்தமோகி
பத்தியுடன் பணியப்-பதமலரருள்வாய் [தர்ம]

இராகம் பிலகிரி தாளம் ரூபகம்

பல்லவி.

சங்கரி கிர்பா நிதியே-தயவுசெய் காத்தருள்வாய் [சங்கரி]

அநுபல்லவி.

அங்கபற்கண்ணுமையே அனுதினமே ரக்ஷிப்பாய்[சங்கரி]

சரணம்.

பொங்கரவம் பூண்ட கச்சி-கொண்ட பாண்டீசர் பங்கி
தங்குமிடம் வேறில்லை-சரணமதே நம்பினேன் [சங்கரி]
மாலுமுடனான்முகனும்-மகிமையைக் கண்டறியார்
சாலவடியார் பொருட்டுத்தரணியிலே வருவாய் [சங்கரி]
பத்மருத்ராட்சம் பூண்டு-பணிவுடனைந்தெழுத்தை
திருப்தியுடனே சிந்திக்கத்-திருவடி தந்தருள்வாய் [சங்கரி]

இராகம் சகாண                                        தாளம் ரூபகம்

பல்லவி.

பரமேஸ்வரியே வுன்பாதம்-பாலித்தருளுவாய்

அனுபல்லவி

புரமேமூன் றெறித்தோனிடம்-பொருந்துமறம் வளர்த்தாளே [பர]

சரணம்.

வேதாகமகலையே-விண்ணவர் முனிவர் நிலையே
பூதாதிகள் தலையே-வுனைப் பொருந்துந் தவமிலையேற்கு [பரமே]

அரிப்பிரமர்களாலு-மளப்பரிய பரம்பொருளே
கருவிலினம் புகுதாவண்ணங்-காத்தெனை யாள்வாளே [பரமே]

மணியே மரகதமே வன்பர் மனதில் வளரிதமே
பணியே கொண்டு தமியேன்றன்னைப் பாலிப்பதுன்பதமே [பரமே]

தென்குலசைப்பதியில் வளர்தெவிட்டா யின்பரசமே
கங்குல்தவிரடியார்கட்குக் கதியீவதுன் துஜமே [பரமே]

இராகம் பியாகிடை                                        தாளம்சாப்பு

பல்லவி.

தர்ம சம்வர்த்தனி-கேளம்மா-வென் குறைகளை
தயவு செய்தருள் புரிகுவாயம்மா தற்பரி-யம்மா [தர்ம]

அநுபல்லவி.

கர்மதிரி குணமாகும் வினையேனுக்-குன்பதத்தையே
காதல்செய்து துதிக்கவே யருள்வாய்க்-கருணைவாரி [தர்ம]

சரணம்.

அல்லல் தருமகிலப்பிரபஞ்சமதி-லாசித்தல் பற்றி
யாதரவினோடாகியகம் நொந்தேன்-அடியவர்கள்
எல்லவர்கடம் மேவல் பணிகேட்டு-மற்றவர் தங்க
ளிருபதங்களை யிருதயந்தனிலேயின்புறச்செய்வாய் [தர்ம]

ஆரணங்களுமறிய வரியவளே-யன்புடையவ
ரகமதாலயமாக வதிபவளே-யகலவிடுங்
காரணந்தனை நீக்கியடியேற்குக்-கருணையோடு
கமலபதங்களைச்சூட்டி யருள்புரிவாய்கதிகொடுக்கும் [தர்ம]

சோதிசுகலழி தேக சொற் சொரூபி-தூர்க்குணத்தமசால்த்
தூலமாதிய தொண்ணூராரையும்-யானென்றெந்தப்விட்டு
வாதிநடுமுடியின்றியுன் சொரூபத்-தனவரத
மகமதாகவே நாடும் வகையருள்வா-யற்புதவல்லி [தர்ம]

இராகம் இந்துஸ்தான் தோடி தாளம் சாப்பு கேதி.

நாமவாளி

சீர்பூத்த சிதம்பர நடேசா-சித்தமென் மீதிரங்குவாயீசா. [சீர்பூத்]

பார் நிரக்கினிவளி பரவுமம்பரமாய்
பானுதிங்களியமான் சொரூபா-பவநீங்க [சீர்பூத்]

இராகம் காபி. தாளம் ஏக.

நாமவாளி.

சங்கரி பார்பதி சாம்ப மனோகரி
இங்கிதமாக வுன்னை யேத்த வரமருள்வாய் [சங்கரி]

இராகம் முகாரி தாளம் ஆதி.

## ஸ்ரீ அம்பாள் கீர்த்தனம்

பல்லவி.

தேவியுன் பாதத்தென்னைச் சேர்ப்பாய்-திருநீலகண்டன் [தேவி]

அநுபல்லவி.

பாவின இசையொடு-பத்தியால் துதிசெயுந்
தாவிலன்பர்கட்குத்-தயவு செய்தருளும் [தேவி]

சரணம்.

அரிபிரமர்கட் கெட்டாதவத்த-னன்பன்பொருட்டுப்
பரியேறி பாண்டியன் முன்னின்று-பல துரங்கமெல்லாம்
நரிகளென்றறியாத நண்பரசன் கரத்தில்
வரியாய்த் தழைந்த கயிர்மாறிக் கொடுத்த ஈசன் [தேவி]

சித்தனென்றோர் திருப்பேர்கொண்டு-திருவீதி சென்று
செய்கைகளெல்லாமாறச் செய்து-திருப்தியுடனே
பத்திபுரியுமந்தப்பாண்டியன் முன்பிருந்து
நத்துக்கல்லானை நற்கரும் பருத்தியபரன் [தேவி]

இன்னிசைப்பாடல்களோர்பதிக-மின்பமுறவே
இருகாதி வேலிகளொரு பக்க-மியல்பாய் விளங்குஞ்
சென்னெல்ப் பொழில்புடைசூழ் தென்குலசைப் பதிவா
ழுன்னையினுமினியவம்மை யறம்வளர்த்த. [தேவி]

இராகம்பிலகிரி. தாளம் ஆதி

பல்லவி.

தாயே தர்மசம் வர்த்தனி-தன்னடியேனைத்தற்காத்தருளுமுத்தமி

அநுபல்லவி.

வாயேபல்கோடி கொண்டு-மறையனந்தங்களின்னும்
நீயே தஞ்சமென்றுன்னி-நின்றுருகித்துதிக்கும் [தாயே]

சரணம்.

அண்டபிண்டங்களெங்குமா-யமர்ந்தழகைக்
கண்டுகளிக்க நேசித்தே-னிக்காதலையுட்
கொண்டு குறை தவிர்த்து-கூத்தாடு மாயை தரும்
பண்டு வினைகள் நீக்கும் பாதமலர்கள் சூட்டி [தாயே]

அல்லும் பகலும் நின்னையே அன்னியமின்றி
நல்லோர்கள் நாடி நிற்கவே-நன்றியோடென்னை
நில்லென்றவர்களோடும் நித்திய சுகத்தை ஈந்து
பல்சென்மசஞ்சிதங்கள் பாறவருட்கணைக்கி [தாயே]

பன்முகச் சமயங்கள்-பாங்குடனின்று
நன்குமதிக்கும் தெய்வநீ-நற்புந்தியிலா
என்சுடர் வாதையொடு மெழுபவமல்லல் நீத்து
தென்குலசைப்பதி-நற்றேவி அறம்வளர்த்த [தாயே]

முற்றிற்று.

உ

ஸ்ரீ அறம்வளர்த்தநாயகியார் துணை.

# விஞ்ஞாபனம்.

எனது பிதா ஸ்ரீமான் சிவசிதம்பர ஓதுவாமூர்த்தியவர்களாலியற்றப்பட்ட இப்புத்தகம் வேண்டுபவர்கள் இதனடியிற்கண்டவிடங்களில் பெற்றுக்கொள்ளலாம்.

விலை அணா 1

இங்ஙனம்.

சி. வ. ஆனந்தநடராஜா
வடக்குத்தெரு, குலசேகரன்பட்டணம்.

அ. சி. ஆ. ஆனந்தநடராஜா
அரிசிவியாபாரம், நாலாங்குருக்குத்தெரு,
கொழும்பு.

எஸ். எஸ். ஷண்முகம்பிள்ளை
விஷ்ணுகமிட்டி ஆபீஸ், திருநெல்வேலி.